27-12-41.

139

உ

குகமயம்

# திருப்போரூர்க் கோயில் வரலாறு

திருவாளர் - ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார்

அவர்களால் இயற்றப்பட்டு

திருப்போரூர் ஸ்ரீ கந்தப்பெருமானூர் தேவஸ்தான

அதிகாரிகளால்

பதிப்பிக்கப்பட்டது

சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை, சென்னை



லை அணா 1



# முகவுரை

இச்சிறு நூல் திருப்போரூரிலுள்ள ஸ்ரீ கந்தப்பெருமானுர் கோயில் வரலாறு தெரிவிப்பதாகும். நம் தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு திருக்கோயிலும் ஒவ்வொரு காரணம்பற்றித் தோன்றி நிலவுந் தன்மையது. அதன் பண்டை வரலாறு அறியாது நம்மவர் பற்பலவாறு கூறுவதோடு பொய்ம்மைக் கதைகளையும் பெருக்கு வர். உண்மையை உலகவர் அறியவும், பண்டைப் பெருமை யுணரவும் இத்தகைய நூல்கள் சிறப்புடையனவாகும். யாவரும் மெய்யுணர வைப்பதே சிறந்த பணியாக்கொண்ட இந்துமத தர்ம நிலையப்பாதுகாப்புக் கழகத்தினருள் ஒருவராகிய(Commissioner, Hindu Religious Endowment Board) திருவாளர் - ராவ்பகதூர் - C. M. இராமசந்திரஞ் செட்டியார் B. A., B. L., F. R. G. S. அவர்கள் அனுப்பிய சுற்றறிக்கை பெரிதும் பயன்றரத்தக்கதாயிற்று. இவ்வறிக்கையே இந்நூல் எழுதுவதற்குக் காரணமாகும். இதனை எழுதும் பணியைத் தந்து ஊக்கிய திரு. செட்டியார் அவர்கட்கும், திருப்போரூர் தேவஸ்தான தர்ம கர்த்தர்களாகிய ஸ்ரீமத். சிதம்பரசண்முக சுவாமிகள், திரு. சுந்தர மூர்த்தி முதலியார் அவர்கட்கும், ஷை திருக்கோயில் நிர்வாக அதிகாரியாயிருந்து பல குறிப்புக்களடங்கிய கட்டுரை எழுதித்தந்த பிரம்மஸ்ரீ - G. S. வேங்கடராமய்யர் அவர்கட்கும், தற்போது நிர்வாக அதிகாரியாயுள்ள திரு. பஞ்சநத முதலியார் B. A., B. L. அவர்கட்கும் எனது நன்றியைச் செலுத்துகின்றேன்.

திருவொற்றியூர்
5-2-1941

ரா. சண்முகசுந்தரன்.

79/4

உ

குகமயம்

# திருப்போரூர்க் கோயில் வரலாறு

உலகின்கண் விளங்கும் உயிர்கள் யாவும் உய்யும் பொருட்டுப் பரம்பொருள் பலப்பல திருமேனிகள் தாங்கி அருள்புரியா நிற்கும். அவைகளுள் ஒன்றாய் உயிர்கட்குச் சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் எனும் அசுரர்களால் நேர்ந்த துன்பங்களை மாற்றக்கொண்ட வடிவம் முருகப் பெருமானது வடிவமாகும். அப்பெருமான் திருக்கோயில் கொண்ட பதிகள் நம் தமிழ்நாட்டில் பலவுளவாயினும், தொண்டை நன்னாட்டில் விளங்குவது முப்பத்துமூன்றே. அவைகளுள் சிறப்புற்றது திருப்போரூர். இது பண்டைக் கல்வெட்டுச் சாசனங்களில் திருப்போரியூர் என்று வழங்கப் படுகின்றது. வடமொழியில் யுத்தபுரி என்றும், சமரபுரி என்றும் கூறுவர்.

இவ்வூர் செங்கல்பட்டு ரயில்வே நிலயத்திற்கு வடகிழக்கில் 16 மைலிலுள்ளது. மோட்டார் வசதியுண்டு. சென்னையிலிருந்து மோட்டார் செல்லும் மார்க்கமாய் 36 மைலிலிருப்பது. திருவான்மியூருக்கு அடுத்துள்ள பார்ப்பான்சாவடியில் படகு ஏறிவரின் 18 மைலிலுள்ளது. திருக்கழுக்குன்றத்து ஈசானதிக்கில் 10 மைலிலும், கேளம்பாக்கத்திற்குத் தெற்கில் 4 மைலிலும் இடையே அமைந்துளது.

## பழைமை

ஆதியில் விஷ்ணுமூர்த்திக்கும் இலக்குமிக்கும் கண்ணுவ முனிவரால் நேர்ந்த சாபவிமோசனத்திற்காகச் சிவபெருமான் எழுந்தருளி அவர்கட்குச் சாபவிடுதலை யுண்டாக்கின

தலம் என்றும், இத்தலத்தில் முருகப்பெருமான் வள்ளி தெய்வானை யம்மைமாருடன் மிகவிருப்பமாகத் திருக்கோயில் கொண்டு தேவர்கட்கும் பிறருக்கும் அருள் பாலிக்கிறரென் றும், அகத்திய முனிவர் முதலியோர்க்குச் சிவபெருமானுக் குச் சொல்லியருளிய பிரணவப்பொருளின் கருத்தினை உப தேசித்தா ரென்றும் திருப்போரூர்த் தலபுராணம் கூறுகின் றது. இப்புராணம் இயற்றினவர், புரசை - அஷ்டாவதானம். சபாபதி முதலியாராவார். கந்தப்பெருமான் திருக்கோயிலுக் குப் பின்புறம் ஒரு மலையுண்டு. அது பிரணவமலை யென்பர். வேதத்திற்கு முன்னே சொல்லக்கூடியதாயுள்ள பிரணவம் முருகப்பெருமானைப் பூசித்து அம்மலையாக நின்றதென்பர். இக்குன்றின்மேல் கைலாசநாதர் பாலாம்பிகையுடன் எழுந் தருளி யிருக்கின்றனர். இங்கு விஷ்ணுமூர்த்தியும் இலக்குமி யும் வழிபாடு செய்தார் என்றும் கூறப்படுகின்றது. இதன் சாரலில் வடபுறமாக வேம்படி விநாயகர் கோயிலமைந்துள் ளது. அங்குள்ள வேப்பமரம் இலக்குமி பிருகுமுனிவர் சாபத்தால் அவ்வாறு உருக்கொண்டாள் என்று புராணம் கூறும்.

இவை புராணக்காலத்துச் செய்தியாயினும் இத்திருக் கோயில் புராதனப் பல்லவர் காலத்து விளங்கியதென்பதற்கு அங்கு ஒரு கல்வெட்டு விளங்குகின்றது. பன்னிரண்டாவது பதின்மூன்ருவது நூற்ருண்டின் பதிவு செய்யப்பட்ட கல் வெட்டுக்களிலிருந்து திருப்போரூர் ஜயங்கொண்ட சோழ மண்டலமாகிய தொண்டை நாட்டில் ஆமூர்க்கோட்டத் துள் குமிழாநாட்டில் ஒரு நகரமாகவிருந்தது. அக்காலத்து விளங்கிய திருக்கோயிலில் கோப்பரகேசரி பன்மர் கல்வெட்டு ஒன்றும், விக்கிரம சோழன் கல்வெட்டுக்கள் இரண்டும், விஜய கண்ட கோபாலதேவர் கல்வெட்டு ஒன்றும் காணப்படுகின் றன. விக்கிரம சோழன் கல்வெட்டுக்களில் ஒன்று கந்தப்

பெருமானுக்கு ஆமூர்கோட்டத்துச் சிறுகுன்ற நாட்டு செம்பாக்கம் எனப்படும் பரகேசரி நல்லூரைப் பிள்ளையார் திருவிழாப் படிக்காகக் கொடுக்கப்பட்டதை யறிவிக்கின்றது. மற்றொன்று அச்சோழன் தேவதானமாக நிலம்விட்டமை தெரிவிக்கும். விஜயகண்ட கோபாலதேவர் கல்வெட்டு நந்தா விளக்கிற்காகப் பொன் கொடுத்தமை அறிவிக்கும். இக்கல்வெட்டுக்கள் யாவும் தற்போது தெய்வயானை யம்மையார் கோயில் சுவர்களில் அங்குமிங்குமாகக் காணப்படுகின்றன. இச்சுவர்கள் முன்னே கந்தப்பெருமான் கருப்பக்கிரகக் கோயிலில் அமைந்திருக்க வேண்டும். பின்னர் அங்கிருந்து கொண்டுவரப்பெற்று தெய்வயானை யம்மையார் கோயில் ஆக்கப்பட்டிருக்க வேண்டும்.

இத்திருக்கோயில் காலக்கிரமத்தால் ஜீர்ணமாகிவிட பதினேழாம் நூற்றாண்டின் நடுவில் திருப்போரூரை வந்து சேர்ந்த சிதம்பர சுவாமிகள், முற்றும் பனங்காடாகவிருக்க ஒரு பெண்பனை மரத்தடியில் முருகப்பெருமான் சுயம்பு மூர்த்தியாகப் புற்றினால் மூடியிருப்பதை நீக்கித் திருக்கோயில் கட்டினார். கருப்பக்கிருகம் அவரது திருப்பணியாகும். தெய்வயானை யம்மையார் கோயிலும் முன்னருரைத்தபடி கந்தப்பெருமான் கோயிலில் முன்னிருந்த கற்களைக் கொண்டுவந்து திருப்பணியாயிற்று. சிதம்பர சுவாமிகள் பரம்பரையில் பின் வந்த மடத்து அதிபதிகள் பற்பல திருப்பணிகள் செய்து தற்காலம் காணப்பெறும் திருக்கோயில் ஆக்கப்பட்டது. திருப்பணிகள் யாவும் சிதம்பர சுவாமிகள் சரித்திரத்திலும் அவர் பின் வந்தவர்களுடைய சரிதங்களிலும் குறிக்கப்பட்டுள்ளன. அவை சுருக்கமாகப் பின்னர் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## திருக்கோயிலமைப்பும் சந்நிதிகளும்

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியுடையது. கருப்பக்கிரகத்தில் பெண்பனையினடியிலுள்ள புற்று மூர்த்தியாய்க் கந்தப்பெருமான் வள்ளியம்மையார் தெய்வயானையம்மையார் விளங்குகின்றனர். இவர்கள் ஒரு மேடையில் நிற்கவும், கீழே ஒரு சிறு பீடம்மீது சிலையால் சிறு உருவமாக கந்தப்பெருமான், வள்ளியம்மையார், தெய்வயானை யம்மையார் திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வுருவங்களைச் சிதம்பர சுவாமிகள் அபிஷேகாதிகள் அருளவேண்டி யமைத்தனர் என்று கூறுவர். புற்று மூர்த்திகளுக்குப் புனுகு சட்டம் சாத்தி, கவசம், திருவாபரணங்கள், பட்டுத் துணிகள் சாத்துவதே தவிர அபிஷேகாதிகள் செய்யப்பெறுவதில்லை. மூர்த்திகளை எதிர்நோக்கியுள்ளது ஒரு யானை. அதற்குப் பின்னே ஒரு பலிபீடம். இக்கருப்பக் கிரகத்துக்குக் கீழ்ப் பாகத்தில் கிரந்த எழுத்துக்களால் ஒரு கல்வெட்டு பதிவு செய்யப்பட்டுள்ளது. அது சிதம்பர சுவாமிகள் பரம்பரையில் வந்த மூன்றும் பட்டத்தவர் காலத்தியது என்று கூறுகின்றனர். அது இத்திருக்கோயிலில் சந்நிதிகள் இருக்கும் திசைகளையும், திருப்போரூரைச் சுற்றியுள்ள பல வூர்களையும் அவைகளுக்கும் திருப்போரூருக்கும் உள்ள தூரத்தினையும் அறிவிக்கின்றது.

கீழ்ப் பீடத்திலிருக்கும் மூலமூர்த்தியின் மேல்தூக்கியிருக்குங் கரங்களில் உடம்பிடி, குலிசாயுதங்களில்லாமல் ஜபமாலையும் கமண்டலமும் காணப்படுகின்றன. இக்கோலம் பிரமனைச் சிறையிலடைத்து முருகப்பெருமான் தாமே படைப்புத் தொழில் செய்யும்போது கொண்டனர் என்று கந்தபுராணவாசிரியர் கச்சியப்ப சிவாசாரியார்,

> "ஒருகரந்தனிற் கண்டிகை வடம்பரித் தொருதன்
> கரதலந்தனிற் குண்டிகை தரித்திரு கரங்கள்

வரதமோ டபயக் தரப்பரம் பொருண்மகனோர்
திருமுகங்கொடு சதுமுகன் போல்விதி செய்தான் ”

என்று அருளியுள்ளார்.

கருப்பக்கிரகத்தில் வெளிப்புறத்தில் ஐந்து மாடங்களுண்டு. தெற்கிலிருந்து வலமாக வருவோமானுல் முதல் மாடத்தில் கணபதியும், இரண்டாம் மாடத்தில் அபயம், வச்சிராயுதம், கோழி, வரதம் தாங்கிய முருகனும், மூன்ரும் மாடத்தில் தண்டாயுதம், வரத்முடைய இருகரங்களுடன் முருகனும், நான்காவது மாடத்தில் அபயம், ஜபமாலே, கமண்டலம், வரதம் தாங்கிய முருகனும், ஐந்தாவது மாடத்தில் விஷ்ணு துர்க்கையும் இருக்கக் காண்கிரும். அந்தப் பிரகாரத்தில் தெற்கே சிலேயாலாக்கப்பட்ட அகத்தீஸ்வரர், நாகங்களிரண்டு, விநாகயமூர்த்தியும், வீரபத்திரர், வீரவாகு வைக்கப்பட்டுள்ளன. அவர்கட்கு அருகே நித்திய பூசைக்கு வேண்டிய ஓமவேதிகை அமைக்கப்பட்டுள்ளது. மேற்குப்புறத்தில் தாமிர உருவங்களாக மலேக்கோவில் சார்ந்த விநாயகர், சோமாஸ்கந்தர், தனியம்மன், சந்திரசேகரர், தனியம்மன், த்வனிச் சண்டேசுரர், சூலாயுத அஸ்திரதேவர், இத்திருக்கோயிலேச் சார்ந்த சிவபெருமான் முருகப்பெருமானிடம் பிரணவோபதேசம்பெறும் மூர்த்தி, பிரமன், விஷ்ணுமூர்த்தி, தேவேந்திரன், நந்திபெருமான், வீரவாகுதேவர், உடம்பிடி அஸ்திரதேவர், மாணிக்கவாசகர், மாத்ருச் சண்டேசுரர், மயிலின்மீது ஒரு கால் வைத்து வில்லுடன் நிற்கும் முத்துக்குமார ஸ்வாமி ஆகிய இவர்களது விக்கிரகங்களுண்டு. வடக்குப்புறத்தில் சண்டேசுரர் தெற்குநோக்கிய வண்ணமாக அமைக்கப்பட்டுள்ளார். வடகிழக்கில் யந்திர ஸ்தாபனமும் அறுமுகனுர் வள்ளி தெய்வயானே நாச்சிமார்களுடன் விளங்கும் சந்நிதியுமுண்டு.

இப்பிரகாரத்தைவிட்டு வெளிவந்தவுடன் தெய்வயானை யம்மையார் திருக்கோயில் காணப்பெறும். அதற்கடுத்த சிவகாமியம்மையாரோடு நட்டப்பிரான் சந்நிதி யுண்டு. தெய்வயானையம்மையார் திருக்கோயில் சுற்றியுள்ள ஐந்து மாடங்களில் பிராஹ்மியும், மாஹேஸ்வரியும், வைஷ்ணவியும், கௌமாரியும், வராஹியும் முறையே தாபிக்கப்பட்டுள்ளன. இத்திருக்கோயில் தெற்குநோக்கிய சந்நிதியாகும். இங்கு தெற்கே ஒரு பெருவாயிலும், கிழக்கே ஒரு வாயிலும் உள்ளன. தெற்குவாயிலாகச் சென்றோமானால் சர்வ வாத்திய மண்டபம் வழியாய் வள்ளியம்மையார் சந்நிதியை யும், உற்சவமூர்த்தி சந்நிதியையும் அடையலாம். இவ்விரு சந்நிதியும் உயர்ந்த மேடைமேல் காணப்பெறுகின்றன. உற்சவமூர்த்தி சந்நிதிமாத்திரம் இரும்பு அடைப்பு வாயி லுடன் அமைக்கப்பட்டுள்ளது. இங்குப் புறம்பேயுள்ள மேடையின்மீது ஒவ்வொரு கார்த்திகை நாளிலும் மாலை 3 மணிக்கு மஹாபிஷேகம் இம்மூர்த்திக்கு நடைபெறுகின் றது. வள்ளி தெய்வானை யம்மையாரோடு விளங்கும் கந்தப் பெருமான் திருவுருவங்கள் இக்கோயிலைச் சார்ந்த வசந்த மண்டபம் கட்டப்படுங்காலத்துக் கீழே மண்ணினின்றும் எடுக்கப்பட்டன என்று சொல்லப்பெறுகின்றது. இவ்வுரு வங்கள் மிக்க பழைமையானவை. கந்தப்பெருமான் திருக் கரங்கள் அபயம், ஜபமாலை, கமண்டலம், வரதம் கொண்டன வாகக் காணப்பெறும். தவிர விநாயகர், முல்லைச்சி அம்மன், வள்ளியம்மையார் தனிஅம்மன், தெய்வயானை யம்மையார் தனிஅம்மன், லீலாவதி, கலாவதி, இளையநாயனார், வள்ளியம் மையார் தெய்வயானை யம்மையாருடன், நித்யோற்சவர், மலைக் கோயில் பிரதோஷ நாயகர், பள்ளியறை நாயகர், மதுரை மீனாக்ஷியம்மை முதலியவர் விக்கிரகங்கள் இச்சந்நிதியுள் வைக்கப்பட்டுள்ளன.

பின்பு பெரிய பிரகாரத்துள் வலம் வருவோமானுல் தெற்கே பத்தி மண்டபங்கள் சிறு அறைகளாகத் தடுக்கப் பட்டுத் திருக்கோயிற் பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. மேற்கிலுள்ள பத்தி மண்டபத்தில் சிலையில் சனிபகவான், நவவீரர், நாகங்கள், சத்தமாதாக்கள் வைக்கப்பட்டுள்ளன. வடக்கில் சிதம்பரசுவாமிகள் ஆலயமுண்டு. கருப்பக்கிரகத் தில் கீழ்ப்பாகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள கிரந்தக் கல் வெட்டில் இச்சந்நிதிபற்றிக் குறிக்கப்பட்டுள்ளது. இதற்கு எதிரே வான்மீகேசுரர் ஆலயமும் புண்யகாரினி அம்மையார் ஆலயமுடன் மேற்கே நோக்கிய சந்நிதியாய் விளங்குகின்றது. இச்சந்நிதிக்குப் பின்புறம் காசி விஸ்வநாதர் விசாலாக்ஷி சந்நிதிகளுமுண்டு. இதற்கெதிரே வன்னிமரமும் தீர்த்தக் கிணறும் காணப்பெறும். இவைகட்கு அருகில் யாகசாலையும் அதைச் சார்ந்த புதிய மண்டபமும் உள்ளது. பைரவர்சந்நிதி மேற்கு நோக்கியவண்ணமாக கீழைச் சுவரிலுள்ளது. யாக சாலை மண்டபம் ஒட்டி இருபத்துநான்கு கால்களுடைய ஒரு பெரிய மண்டபம் உண்டு. ஒவ்வொரு தூணிலும் ஒருகையில் கேடகமும் ஒரு கையில் வாளுமுடைய நவவீரர்கள் முதலி யோர் உருவங்கள் காணப்படும். இது திருப்போரூர் என் பதைக் குறிப்பதற்கு அமைத்தது போலும். சூரபதுமன் போரில் எஞ்சிய அசுரர்களைப் போராடிய தலம் என்று புரா ணங் கூறியது உறுதிபடுத்தற்குச் செய்தது போலும். இம் மண்டபம் அருகில் மயில்மண்டபம் என்று மற்றொரு மண்டப முண்டு. அது சமீபத்தில் ஆக்கப்பட்டது. இதனது தெற்கே மடைப்பள்ளியும் கிழக்கே சேவைக்கு அமைக்கப்பட்ட திருக் கண்ணாடி மண்டபமுமுள்ளன. சூரியன்சந்நிதி திருக்கண்ணாடி மண்டபத்திற்கு வடக்கேயுள்ளது. இருபத்திநான்கு கால் மண்டபத்திலிருந்து வெளியே வருவதற்கு ஒரு கோபுர மமைந்த வாயிலுண்டு. அதற்கெதிரில் மயிற்கோயிலும் பலி

†

பீடம், துவஜஸ்தம்பமும் இவைசுற்றி முப்பது இரும்புத்தூண்கள் மேலே அமைக்கப்பட்ட வட்ட தளமும் காணப்படுகின்றன. இவைகட்கு வடக்கே வாகனக் கிடங்கும், மின்சார விளக்குயந்திர அறையும், வேல் மண்டபமும் இருக்கின்றன; தெற்கே தேவஸ்தான ஆபீஸும், அதற்கு மேற்கில் விநாயகர் இடும்பன் இடும்பி சந்நிதிகளும் உள்ளன. இடும்பன் இடும்பி சந்நிதிகளிலிருந்து திருக்குளம் வரை ஒரு புதிய மண்டபம் அமைந்துள்ளது. கிழக்கே சந்நிதி தெருவில் மிக வுயர்ந்ததாய் விசித்திரமான சித்திரங்களையுடைய பதினறுகால் மண்டபமுண்டு.

## தீர்த்தங்கள்

இத்திருக்கோயிலுக்குத் தெற்கில் வள்ளையாரோடையென்றும், சரவணப் பொய்கையென்றும் சொல்லப்பெறும் திருக்குளமுண்டு. இதன் கிழக்குக் கரையில் நான்குகால் மண்டபம் ஒன்று உண்டு. பிரணவாமிர்தம் என்று மற்ருெரு தீர்த்தம் மலையின்மேலுண்டு. வேலாயுத தீர்த்தம் என்று வேருெரு திருக்குளம் கண்ணுப் பேட்டையில் சிதம்பர சுவாமிகள் திருமடத்திற்கு வடகிழக்கிலுள்ளது.

## தினப் பூஜையும் திருவிழாவும்

இத்திருக்கோயில் காலை, உச்சி, மாலை, இரவு என்னும் நான்கு காலங்களிலும் அபிஷேக தீபாராதனைகள் நடைபெறுகின்றன. சிறப்புத் திருவிழா மாசி மாதத்தில் நடைபெறுகின்றது. மகநக்ஷத்திரத்தன்று தீர்த்தம். முதல்நாள் முதற்கொண்டு பத்துநாள் வரையிலும் பகல் இரவு காலங்களில் கந்தப்பெருமான் வீதியில் வருவார். விசேட காலத்தில் பெரிய உற்சவ மூர்த்தியும் மற்றக் காலங்களில் இளைய நாயனரும் புறப்படுவது வழக்கம். மூன்றும் நாளில் பிரணவோபதேசம் செய்தருளிய திருக்கோலக் காட்சி யுற்சவம் நடை

பெறும். எட்டாம் நாளில் பாரிவேட்டை யுற்சவமாதலின் மூன்றுமைல் தூரத்திலுள்ள ஆலத்தூருக்குக் கருப்பக்கிரகத் துப் பிரகாரத்திலுள்ள மயிலின் மேல் ஒரு காலை ஊன்றி வில்லும் வேலும் கொண்டு யுத்த சன்னத்தராயுள்ள முத்துக் குமாரசுவாமி மூர்த்தி வெளிப்படுவார். இச்சிறப்பு விழாக்க ளன்றி வைகாசி மாதத்தில் விசாக நக்ஷத்திரத்தன்று பெரிய அபிஷேகமும், 300 படி திருப்பாவாடை நிவேதனமும், சிதம் பர சுவாமிகளுக்குக் காட்சி யுற்சவமும் சிதம்பர சுவாமிகள் ஆணைப்படி நடந்து வருகின்றன. ஆவணியில் பவித்ரோற் சவம் நிகழ்கின்றது. புரட்டாசி மாதத்தில் நவராத்திரி திரு விழா, சிறப்பாக நடைபெறுவதோடு சிதம்பர சுவாமிகள் பரம்பரையில் மூன்ருவது பட்டம் வகித்த முத்துக்குமார சுவாமிகள் காலம் முதற்கொண்டு அவர்கள் செய்த சிறு நாட கங்கள் இவ்விழா ஒன்பது நாட்களிலும் உருத்திர கணிகை யரால் நடிக்கப்படுகின்றன. சஷ்டி கூடிய தினத்தன்று போஜ ராஜன் நாடகம் நடிப்பார்கள். அந்நாடகத்தில் ஒரு சபதம் நெருப்பில் நன்ருகச் சிவந்த இருப்பு தகட்டினைக் கையால் அடிக்கும் முறையாக நிகழும். இதனை மழுவடியென்று கூறு வர். ஐப்பசி மாதத்தில் கந்தர் சஷ்டித் திருவிழா பகலிலும் இரவிலும் ஆறு நாட்களில் நடைபெறுவதோடு சஷ்டியி னன்று மாலை சந்நிதி வீதியில் சூரபதுமனுதியர் ஆறு உருவங்கள் செய்து சீர்பாதந் தாங்கிகள் சுமந்து சென்று சமர்புரிவதுபோல் ஆடியும் வீரவாகுதேவர் துரத்திச் சென்று போராடுவதுபோல் நிகழ்த்தி அவர்களைச் சம்மாரஞ் செய்தலாகிய காட்சி மிக இனிமையாகும். மறுநாள் தெய்வ யானையம்மையார் திருக்கல்யாணம் நடைபெற்று இரவு திரு வீதி யுற்சவம் நிகழும். மாதந்தோறும் கார்த்திகைத் தினத் தில் மயில்வாகனத்தில் இரவில் இளையநாயனுர் காட்சி தருவர். சித்திரை, ஆடி, தை, மாசி ஆகிய மாதங்களில்

நேரும் கார்த்திகைகளில் விசேடகூட்டமுண்டு. அன்று காலங்களில் நிரம்பிய அபிஷேகம் செய்வார்கள். பரணி தினங்களில் காலை, உச்சி, மாலைகளில் நிரந்தரமான ஏற்பாட்டில் அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் பஞ்சபருவ உற்சவங்கள் சுக்ரவாரம், பிரதோஷம், சஷ்டி, விசாகம் கூடிய தினங்களில் நடைபெறும். மார்கழியில் திருவாதிரையில் அறக்கட்டு உற்சவமும், பங்குனியுத்தர உற்சவமும், வசந்தோற்சவம் சித்திரை மாதத்தில் ஆறு நாட்களிலும், மாட்டுப் பொங்கலுக்கு மறுதினம் பாரிவேட்டை யுற்சவம் செய்யப்படுகின்றன.

இங்குத் தினசரி பூஜை வான்மீகேஸ்வரரிடம் தொடங்கி பைரவரிடம் முடிகின்றது. சூரபதுமன் முதலியோர்களை வதைத்த காரணத்தால் நேர்ந்த தோஷத்தைக் கந்தப் பெருமான் வான்மீகேஸ்வரரைப் பூசித்த காரணத்தால் நீங்கியது என்ற புராண கதையொட்டி அச்சந்நிதியிலிருந்து பூஜை தொடங்கப் பெறுகின்றது.

## யந்திரங்கள்

இவ்வாலயத்தில் இரண்டு யந்திரங்களுள்ளன. ஒன்று முன்னரே குறிக்கப்பட்டுள்ளது. அது சிதம்பர சுவாமிகளால் ஆக்கப்பட்டது. அதில் விநாயகர், சுப்பிரமணியர், வள்ளியம்மையார், தெய்வயானையம்மையார், சிவபெருமான், உமாதேவியார், சண்டேசுரர், அஷ்டதிக்கு பாலகர், பைரவர், இவர்கட்கு உரித்தான எழுத்துக்கள் அமைக்கப்பட்டு அவர்களை எழுந்தருளப் பண்ணியுள்ளது. இதற்குத் தினப்படி பூஜையுண்டு. சிறப்பாக, சிதம்பர சுவாமிகள் ஆணைப்படி கந்தர்சஷ்டி ஆறு நாட்களில் சிறந்த அபிஷேகமும் யந்திர மாலாபூஜையும் செய்யப்படுகின்றன. இந்த யந்திரம் மிகுந்த மகிமையுடையதா யிருந்தது. இப்போதும் பிரார்த்தனை

செய்து கொள்வோர்க்கு வேண்டியவை யருள்புரிந்து கொண்டு வருகின்றது.

மற்றொரு யந்திரம் கருப்பக்கிரகத்திலுள்ளது. அதனைத் தீர்த்த சக்கரம் என்று கூறுவர். இதற்குத் தினந்தோறும் பூஜை செய்யப்படுகின்றது.

## ஆலய நிர்வாகம்

சிதம்பர சுவாமிகளும், அவருக்குப் பின் வந்த அவரது மடத்தின் அதிபதிகளும் இக்கோயில் பரிபாலனத்தை 1834-ம் வருஷம் வரையில் தனித்த முறையில் நடத்தி வந்தார்கள். அவ்வப்போது அவர்கள் சில்லாக் கலெக்டர் இசைவு பெற்றுப் பரிபாலனஞ் செய்தார்கள். முதன் முதலில் திருப்போரூரில் வசித்து வந்த சான்றோர்கள் சிதம்பர சுவாமிகளைத் தர்மகர்த்தாவாக இருக்கச் செய்தனர். ஏழாவது பட்டம் வகித்த சுவாமிகள் காலத்து சர்க்கார் சில குறைபாடுகள் அறிந்து தாமே 1842-ம் வருஷம் வரையில் செங்கற்பட்டு தாசில்தார் மூலமாகக் காரியங்கள் நடத்தினர். பின்பு மேற்படி வருடத்தில் ரெவினியூ போர்ட்டு உத்தரவின்படி எட்டாவது பட்டம் வகித்த சுவாமிகளும் சுரோத்திரியதார் சபாபதி முதலியாரும் தர்மகர்த்தர்களாக நியமிக்கப்பட்டு நிர்வாகம் தொடங்கிற்று. சபாபதி முதலியாருக்குப் பிறகு வேதகிரி முதலியாரும், அவருக்குப் பின்னர் சிங்காரவேலு முதலியாரும் சிதம்பர சுவாமிகள் ஆதீன பரம்பரை மடாதிபதி டிரஸ்டிகளோடு நிர்வாகம் செய்தனர். 1887-ம் வருஷம் சூணம்பேடு ஜமீன்தார் முத்துக்குமாரசுவாமி முதலியார் செங்கற்பட்டு சப்கோர்டாரால் ரிஸீவராக நியமிக்கப்பட்டு அவருக்குப் பின்பு நான்கு ரிஸீவர்கள் தொடர்ந்து காரியம் செய்து வந்தனர். பின்னர் சீர்கேடான நிர்வாகம் தலைப்படவே 1920-ம்வருஷம் கிராமத்தார் வழக்குத்தொடுக்க

1928-ம் வருஷத்தில் அவ்வழக்கு முடிவடைந்து ஒரு திட்டம் (Scheme) அமைக்கப்பட்டது. ஆதீன பரம்பரை டிரஸ்டியுடன் மற்றைய செகுலர் (Secular)டிரஸ்டி யொருவர் நிர்வாகத்தை நடத்தி வந்தனர். திரு. ராவ்சாகிப். M. வேதாசல முதலியார், வடமலை முதலியார், திருமயிலை-சுந்தரமூர்த்தி முதலியார் செகுலர் டிரஸ்டிகளாக ஒருவருக்குப் பின் ஒருவராக அப்பதவியேற்று நிர்வாகம் புரிந்தனர். 1939-ம் வருடத்தில் இந்துமத தர்மநிலயப் பாதுகாப்புக் கழகத்தார் இத் திருக்கோயில் பரிபாலனத்தை ஏற்றுக்கொண்டு சிதம்பர சுவாமிகள் ஆதீனம் பன்னிரண்டாவது பட்டம் வகிக்கும் திரு. சிதம்பர சண்முக சுவாமிகளுடனும்,செகுலர் தர்மகர்த்தாவாய் விளங்கும் திரு. சுந்தரமூர்த்தி முதலியாருடனும், தங்களால் நியமிக்கப்படும் ஒரு அதிகாரியுடனும் (Executive Officer) நிர்வாகம் தற்போது நிகழ்த்தி வருகின்றார்கள்.

## சோத்துக்கள் நிலம் வீடு முதலியன

திருப்போரூரும்,தண்டலமும் இக்கோயிலுக்கு ஏகபோக மிராசு பாத்தியமுடனுள்ளன. இவைகளுள் 820 ஏக்கர் நன் செய் நிலமும் 305 ஏக்கர் புன்செய் நிலமுமுள்ளன. பம்மல், இடையன் குப்பம், பொன்மாறு, கடம்பூர், மடையத்தூர், பூண்டி, வெண்பாக்கம், ஆத்தூர், ஆலத்தூர் முதலிய கிராமங்களிலும் நிலங்களுண்டு. சென்னையில் சில வீடுகளும், கடைகளும் இருக்கின்றன. புதுச்சேரியில் 10000 ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள், புதுவை. முத்துச் சிதம்பர பிள்ளை அவர்களால் 1905ல் சாஸனம் செய்யப்பட்டன. இச் சொத்துக்கள் மிக்க பெருமுயற்சியால் திரு. சிதம்பர சண்முக சுவாமிகளால் 1931ல் ஸ்வீகரிக்கப்பட்டு இத்திருக் கோயில் நிர்வாகத்துள் கொண்டுவரப்பட்டன. பிரம்மோற்ச

வத்துள் 5-ம் நாள் திருவிழாவிற்காக ரூபாய் 2000 ஜாமீனாக சென்னை புழல். நாராயணசாமி பிள்ளையவர்களால் தரப்பட்டுள்ளது. பரணிமாலைச்சந்தி அபிஷேகத்திற்காக ரூபாய் 1000 ஜாமீனாக சென்னைக் கொத்தவால்சாவடி மருந்துகடை வியாபாரம் தங்கவேலு முதலியார் அவர்களால் கொடுக்கப் பட்டுள்ளது.

## திருவாபரணங்கள்

தற்போது 3000 ரூபாய் மதிப்புள்ள திருவாபரணங்களுள்ளன.

## வருட வருமானம்

நிலங்களிலிருந்து ரூபாய் 3500-ம், விசேட காலங்களில் சேரும் உண்டியல் வசூலிலிருந்து ரூபாய் 4500-ம், கவர்ன்மெண்ட் தஸ்திக்கிலிருந்து ரூபாய் 2361-ம், வீடு கடை வாடகையிலிருந்து ரூபாய் 2400-ம் ஆகமொத்தம் ரூ. 12761 ஆகும்.

## உபயக்காரர்கள்

பெரும்பாலும் திருவிழாக்கள் திருக்கோயில் வருமானத்தினின்றும் நிகழ்வதாகும். சிறப்பாகக் கீழ்க்கண்டபடி சில நிரந்தர பண்டுகளால் நடைபெறுகின்றன.

நவராத்திரி யுற்சவம் :—சேக்காடு - திரு. முருகேச முதலியார் வகையராக்கள்.

கந்தர்சஷ்டி யுற்சவம் :—முதல்நாள் - திரு. ஞானம்பாள்.
நான்காம்நாள் - விழுப்புரம். திரு. அமிர்தம்மாள்.
ஏழாம்நாள் - திருவொற்றியூர் சுவாமி முதலியார் குமாரர் முருகேச முதலியார்.

திருவாதிரை அறக்கட்டு உற்சவம் :—கோமளேஸ்வரன் பேட்டை - ஸ்ரீ சட்டநாத ஸ்வாமிகள் சீடர்களான வைசியகுல பேரிசெட்டிமார்கள்.

**பிரமோற்சவம் :**—ஐந்தாம்நாள் - சென்னை புழல். திரு. நாராயணசாமி பிள்ளை பண்டு.

எட்டாம்நாள் - ஆலத்தூரில் விடப்பட்ட மான்யத்தால் நடைபெறுவது.

12-ம்நாள் - வேடர்பறி உற்சவம் திருப்போரூர் சான்றார் குலத்தவர்.

**பங்குனி உத்தர உற்சவம் :**—தண்டலம் - திரு. தரங்கம்மாள் (இவ்விழாவிற்காக ஆலத்தூரில் 22 ஏக்கர் நிலம் விடப்பட்டது).

**வசந்தோற்சவம் :**—சான்றார் தர்மபரிபாலன சபையார்.

## வாகனங்கள்

சிறப்பாக வெள்ளிக்குதிரை வாகனம் சேக்காடு - திரு. முருகேச முதலியார் வகையறாக்களால் செய்து சமர்ப்பிக்கப்பட்டது. தங்கமுலாம் பூசிய மயில்வாகன முண்டு. ஆடு, பூதம், சிறிய மயில், புருஷாமிருகம் ஆகிய வாகனங்கள் உள்ளன. திருத்தேர் கைங்கரியம் ஆரம்பிக்கப்பெற்று முடிவுறுமலுள்ளது.

## சிறப்பான அபிஷேகங்கள்

கருப்பக்கிரகத்திலுள்ள மூர்த்திக்குக் கார்த்திகைத் தினந்தோறும் அர்த்த ஜாமத்தில் சந்தனுபிஷேகமும் சந்தனக்காப்பும் நடைபெறுகின்றன. இதற்கு ஏற்பாடு செய்துள்ளவர் சேப்பாக்கம் திரு. துளசிங்க செட்டியார் ஆவார். பரணிதோறும் காலை, உச்சி, மாலைகளில் அபிஷேகம் முறையே திரு. வரதப்ப நாயுடு அவர்கள், திரு. வடிவேலு செட்டியார் குமாரர், சென்னைக் கொத்தவால்சாவடி மருந்து கடை வியாபாரம், திரு. தங்கவேலு முதலியார் அவர்கள் நடத்துகின்றார்கள். கார்த்திகைத் தினந்தோறும் மாலை 3 மணிக்கு பெரிய உற்சவமூர்த்திகளுக்கு அபிஷேகம் சர்வ

வாத்திய மண்டபத்தில் திரு. கதிர்வேல் முதலியார் அவர்களால் நடைபெறுகின்றது.

## தேசாந்திரி கட்டளை

திருவாளர்கள் கருங்குழி ஆறுமுக முதலியார், அமராவதியம்மாள் மகள் அலுமேலம்மாள், சிந்தாதிரிப்பேட்டை தெய்வயானையம்மாள், செங்கற்பட்டு இராமாநுஜ செட்டியார் ஆகிய நால்வர் விரும்பிச் செய்த ஏற்பாட்டின்படி தேசாந்திரிகளுக்கு அன்னம் அளிக்கப்பட்டு வருகின்றது.

## சுற்றுக்கோயில்கள்

வேம்படி விநாயகர் கோயில், பிரணவமலையின் அடிவாரத்திலுள்ளது. அங்கு முதன்முதலில் சிதம்பர சுவாமிகள் தங்கினர். அவர் விருப்பத்தின்படி வைசாக விசாகத்தின் மறுநாள் 1008 தேங்காய் சூறை செய்யப்படுகின்றன. இதற்கு மறுநாள் பிரணவ மலையிலுள்ள விநாயகருக்கும், கணநாதருக்கும், தண்டலத்துள்ள விநாயகருக்கும் 108 தேங்காய் உடைத்து நிவேதனஞ் செய்யப்படுகின்றன. மேலைவீதியிலுள்ள பிள்ளையார் கோவில், பிடாரிகள் முல்லையச்சியம்மன், வெண்ராசியம்மன் இத்திருக்கோயில் நிர்வாக அதிகாரிகள் ஆளுகைக்குட்பட்டன.

## திருப்போரூர்ப் பெருமான்மீது நூல்கள்

1. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ். 2. சிதம்பர சுவாமிகள் அருளிய திருப்போரூர்ச் சந்நிதிமுறை. 3. புரசை-அஷ்டாவதானம் சபாபதி முதலியார் இயற்றிய பிரபந்தங்கள் :—

(1) திருப்போரூர்ப் புராணம்
(2) ,, கலம்பகம்

(3) திருப்போரூர் அலங்கார பஞ்சகம்
(4) „ யமகவந்தாதி
(5) „ பதிற்றுப்பத்தந்தாதி
(6) „ பிரணவாசல வெண்பாமாலை
(7) „ திரிபந்தாதி
(8) „ நான்மணிமாலை
(9) „ இருசொல் யமகமாலை (உரையுடன்)
(10) „ சதகம்
(11) „ பிரணவாசல சதகம்
(12) „ வெண்பாமாலை
(13) „ சிதம்பர சுவாமிகள் சரித்திர வசனத்துடன் சேர்ந்த பதிற்றுப்பத்தந்தாதி
(14) „ புராண சரித்திர வசன காவியம்
(15) „ குறவஞ்சி
(16) „ புராண கீர்த்தனை.

## சிதம்பர சுவாமிகளும் அவரது திருமடத்து அதிபதிகளும்

பாண்டி நாட்டில் மதுரையம்பதியில் சிதம்பரசுவாமிகள் சங்கப்புலவர் மரபிற் றிருவவதாரஞ் செய்தருளினார். இவர் இளமைதொட்டு கல்வியிற் சிறந்து விளங்கினார். இவருக்குக் கவிராயர் என்ற பட்டம் அவருடைய புலமையைக் கண்டு வழங்கினர். நூற்புலமையோடு தெய்வபக்தியும் விளங்கியிருந்தது. மதுரையில் திருக்கோயில் கொண்டுள்ள அங்கயற் கண்ணம்மை யெனும் மீனாக்ஷியம்மையாரை உபாசனாமூர்த்தியாக அமைத்துக்கொண்டு அன்புசெய்து ஒழுகினார். இவரது புகழ் நிலமெங்கும் பரவவே கொங்குநாட்டிலுள்ள அவிநாசிக்கும் நடுநாட்டிலுள்ள திருமுதுகுன்றம் எனப்படும் விருத்தாசலத்திற்கும் இடையிலுள்ள ஓரூரில் தனவந்தராகிய ஒரு ரெட்டியார் சிதம்பர சுவாமிகளை வரவழைத்துத் தனது மக்களுக்குக் கல்விப் பயிற்சிக்காக அமைத்தனர்.

அவ்வாறு கல்வி பயிற்றி வருங்காலத்து குமாரதேவர் என்ற ஒரு தவசிரேட்டர் விருத்தாசலத்தினின்றும் புறப்பட்டுத் தனது குருவாகிய சாந்தலிங்க சுவாமிகளைத் தரிசிப்பான் அவிநாசிக்குச் செல்லும்போது ரெட்டியார் வீட்டில் தங்கினர். சிதம்பர சுவாமிகளது நுண்ணுணர்வும் கல்வி பயிற்றும் திறமையுங் கண்டு அவரை ஆட்கொள்வான் சில வேதாந்த சொற்களுக்குப் பொருள் வினவினர். அவர் சொல்லவியலாது சும்மா இருக்க மீண்டு வரும்போது தெரிவிக்குமாறு சொல்லி விடை பெற்றார். மீண்டுந் திரும்பியபோது அச்சொற்களுக்குப் பொருள் கேட்க, சிதம்பர சுவாமிகள் முன்னே போற் சும்மா இருந்தனர். "சின்னாழிகை பொறுத்துச் சொல்க" என்று சொல்லிவிட்டுக் குமாரதேவர் சென்றனர். பின்னும் வந்தபோது சிதம்பர சுவாமிகளைச் சிரம்முதல் கால்வரை மூன்று முறை நோக்கித் தன்னாசிரியரைத் தம்மனத்தினுன்னி அவிநாசிக்குப் புறப்பட்டனர். சிதம்பர சுவாமிகளும் அவரைப் பின் தொடர்ந்து அவிநாசிக்குச் சென்றனர். அங்கு, சாந்தலிங்க சுவாமிகள் இவர்களிருவரையும் பார்த்து, சிதம்பர சுவாமிகள் தீவிர பக்குவத்தை யறிந்து தாம் இயற்றிய வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், கொலை மறுத்தல், அவிரோதவுந்தியார், கண்ணுடையவள்ளலார் இயற்றிய ஒழிவிலொடுக்கம் ஆகிய ஐந்து நூல்களைத் தந்து இவைகட்கு உரையியற்றுகவெனப் பணித்தார். பின்பு குமாரதேவரை நோக்கி "இவ்விளவலைப் புத்திரனாகக் கொண்டு கடாக்ஷிக்க" என்றுரைத்தார். சிதம்பர சுவாமிகள் மேற்குறித்த ஐந்து நூல்களையும் அன்புடன் றொழுது வாங்கி விடை பெற்றுக்கொண்டு குமாரதேவரைப் பின்றொடர்ந்து விருத்தாசலம் வந்து சேர்ந்தனர்.

குமாரதேவர் சிதம்பர சுவாமிகளுக்கு வீரசைவவாகம முறைப்படி இருபத்தொரு தீக்ஷைகள் புரிவித்து இயம நிய மாதிகளைச் செம்மை பெறக் கூட்டுவித்துச் சமாதியில் நிற்கச் செய்தனர். இவ்வாறு பயிலுங் காலையில் ஒருநாள் அவரது தியானத்தில் ஒருமயில் தோகைவிரித்து ஆடக்கண்டு "இது என்னோ கருத்து ?" என்று தனதாசிரியரை வினவி னார். அக்கருத்து இன்னதென்று விளம்பாதவராய்க் குமார தேவர் சிதம்பர சுவாமிகளது உபாசனாமூர்த்தியாகிய மதுரை மீனாக்ஷியம்மையாரைத் தியானித்து அறிந்துகொள்ளுதல் வேண்டும் என்று கூறினார். ஆகவே சிதம்பர சுவாமிகள் மதுரைக்குச் சென்று நாற்பத்தைந்து நாள் கடுந்தவம்புரிந்து மீனாக்ஷியம்மையின்மீது கலிவெண்பா பாடவும் அம்மையார் வெளிப்பட்டு "வடக்கே யுத்தபுரி என்ற ஊர் ஒன்றுளது. அங்கு நீ சென்று எனது குமாரனாகிய சுப்பிரமணியமூர்த்தி யின் ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்வாய்" என்று கட்டளையிட்டார்கள். உடனே சிதம்பர சுவாமிகள் வணங்க அம்மையார் மறைந்தருளினார். பின்பு அங்கிருந்தும் புறப் பட்டு விருத்தாசலம் சென்று தன்னாசிரியர் குமாரதேவர் சமாதியிலிருக்கக்கண்டு அவரை எதிர்நின்று வணங்கி வடக்கே நோக்கிச் சென்றார். பொம்மையபாளையத்தில் வந்து சேர்ந்து அங்குள்ள சிவஞானபாலைய சுவாமிகளோடு சுவாநு பவத்தை முன்னிட்ட நிலைகளைப்பற்றி எட்டு நாள் இரவு பகல்விடாமல் கலந்து பேசி அவரால் சிறப்புக்கள் செய்யப் பெற்று விடைகொண்டு போந்தார். பிறகு யுத்தபுரியைச் சார்ந்து முருகப் பெருமான் கோயில் எங்குள்ளது என்று கேட்டு யாரும் அறியாது வேம்படி விநாயகர் கோயில் ஒன்றுதானுளது என்று காட்ட அவர் அங்கு எழுந்தருளி யிருந்தார். அவ்வாறிருக்கையில் அங்கு விளங்கும் பனங் காட்டிற்குள் நுழைந்து தேடித்திரிகையில் ஒரு பெண்

பனையினடியின் கீழ் சுயம்பு மூர்த்தியாய் சுப்ரமணியப் பெருமான் விளங்கியிருப்பதைக் கண்டு களிப்படைந்தவராய் வணங்கினர். இவ்வாறு வெளிப்படும்படியாகச் செய்வித்தவர்கள் அங்கு வசித்திருந்த சான்றோர்கள் என்று சொல்லப்பெறுவர். அவர்களே முதன் முதலில் சிறு குடிலிட்டமைத்து பூசையின்றிப் பாதுகாத்து வந்தனர். பின்னர் சிதம்பர சுவாமிகள் வேம்படி விநாயகர் கோயிலில் இருந்துகொண்டு வள்ளையாரோடை என்னும் ஓடையில் நீராடி வழிபட்டு வருவாராயினர். ஒரு நாள் இறைவன் குமாரதேவரைப் போன்று உருக்கொண்டு நேர்வர, சிதம்பர சுவாமிகள் ஓடிச்சென்று வரவேற்று தனக்கு மீனாக்ஷியம்மையார் அருளியதைத் தெரிவிக்கவும் இறைவன் அவரையழைத்துச்சென்று நெற்றியில் திருநீறு இடவும், சிதம்பரசுவாமிகள் இறைவனது திருக்கோயில் முன்னிருந்த அளவும் பல மண்டபங்களும் மற்றுமுள்ள பகுதிகளும் கண்டார். உடன் வந்த இறைவர் இவைகளைக் காட்டி மூலமூர்த்தியில் மறைந்தனர். இதனைக் கண்ணுற்ற சிதம்பர சுவாமிகள் " இது திருவருட் செயலாகும் " என்றறிந்து திருப்பணிக்காக முந்தினர்.

பொருள் சேர்க்கை திருப்பணிகட்காகத் திருவருட் செயலால் நேர்ந்தது. அவ்வூர்வழியாய் வந்த கள்வர்கள் சிதம்பர சுவாமிகள்பால் வந்து அவர் அணிந்துள்ள ஆபரணங்களைக் கவர நினைந்தார்கள். அவர்கள் நெருங்கவும் கண்ணிழந்தார்கள். கண்பெற அவர்கள் சுவாமிகளை வணங்கித் தாங்கள் சேமித்து வைத்திருந்த பொருளைத் தந்தார்கள். நோயுற்றவர் தம்பால் வந்திரங்கினபோது நெகிடியில்வெந்த நீற்றினைத் தந்து குணமாக்கிய காரணத்தால் பொருள் சேர்வுற்றது. இன்னும் பற்பல தனவந்தர்கள் தாமே பொருள் கொண்டு போய்ச் சேர்ப்பித்தனர்.

திருப்பணி ஆரம்பிப்பாராய் தான் கண்ணுவப்பேட்டையில் ஒரு குலாலன் ஆதரவில் ஒரு புளிய மரத்தின் கீழிருந்து தனது வாழ்க்கையை நடத்தினர். சுப்ரமணியப் பெருமானுக்குக் கருப்பக்கிரகம் கட்டி பூசைகள் செம்மை முறையில் நடத்த ஏற்பாடு செய்தார். கண்ணுவப்பேட்டையில் தமக்கென்று பூசைமடம், ஒடுக்கவறை முதலியவை கட்டி அங்கு நிஷ்டைகூடும் இயல்பினை விடாதவராயினர்.

இவ்வாறிருக்க, பூந்தமல்லிக் கருகிலுள்ள கோவூரில் திருவவதாரஞ்செய்து பித்துடையவர்போல விளங்கிய சிவசங்கர முதலியார் திருப்போரூர்க் கந்தப்பெருமானர் ஆணையால் சிதம்பர சுவாமிக்குச் சீடனுக ஆக்கப்பெற்ருர். சிதம்பர சுவாமிகள் அவருக்குச் சிவலிங்க தாரணமும், வீரசைவ தீக்ஷைகளையும் செய்வித்து அவரைத் திருப்பணிக் காரியங்களில் ஈடுபடுத்தினர். அவரும் அவ்வாறே ஒழுகிவர, வைகாசி மாதத்தில் விசாகநக்ஷத்திரத்தன்று மஹாபிஷேகம்செய்துவர சிதம்பரசுவாமிகள் கட்டளையின்மேல் சென்று செய்துகொண்டிருக்க,சிதம்பர சுவாமிகள் ஒடுக்கவறைக்குள் ளிருந்து முன்னமே தயாரித்துள்ள ஒரு சுரங்கம்வழியாய் அடுத்துள்ள சமாதிக் குழிக்குள் சென்று சகல பூஜாத்திரவியங்கள் கொண்டு இறைவனைப்பூசித்து,சமாதியுள்நின்று பரிபூரணத்தையடைந்தார். அவ்வமயமே திருக்கோயிலில் தம்முருவங்காட்டி உச்சிமேல் குவித்தகைகளோடு மூலட்டானத்துள் சென்று இறைவனோடு கலந்தனர். இதனைக்கண்ட சிவசங்கரர் தன்னுசிரியர் இவ்வாறு பெருமுத்தி யடைந்தாரென்றறிந்து கண்ணுவப்பேட்டைக்கு வந்து சமாதிக் குழியில் சிதம்பர சுவாமிகளைக் கண்டு ஆராமையால் அழுது பல தோத்திரங்கள் கூறி நின்றபோது திருவண்ணுமலையினின்றும் வந்துள்ள சோணுசலதேவர் அவர் ஆராமையை ஒருவாறு தேற்றினர். சிதம்பர சுவாமிகளது விரிவான சரிதமும் அவர் பின்வந்த சுவாமிகள்

சரிதங்களும் அஷ்டாவதானம் - புரசை - சபாபதி முதலியார் அவர்களால் எழுதப்பட்டு வெளியாகியுள்ளன.

சிதம்பர சுவாமிகளால் இயற்றப்பட்ட நூல்கள்,

1. செய்யுள்
   - (1) மீனாட்சியம்மை கலிவெண்பா
   - (2) நெஞ்சுவிடு தூது
   - (3) திருப்போரூர்ச் சந்நிதிமுறை
   - (4) பஞ்சாதிகார விளக்கம்

2. உரைநூல்
   - (1) வைராக்கிய சதகம்
   - (2) வைராக்கிய தீபம்
   - (3) கொலை மறுத்தல்
   - (4) அவிரோத வுந்தியார்
   - (5) ஒழிவிலொடுக்கம்
   - (6) திருவாசகத்துள் ஒருபாடல்.

சிதம்பர சுவாமிகளுக்குப் பின் அவரது பரம்பரையில் விளங்கியவர்களும் திருக்கோயிற் தர்மகர்த்தர்களாகவும் இருந்தவர்கள் சிவசங்கரதேவர், முத்துக்குமார சுவாமிகள், சிவசங்கர சுவாமிகள், முத்துக்குமார சுவாமிகள், சிதம்பரத் தம்பிரான், சிவசங்கரத் தம்பிரான், முருகேசத் தம்பிரான், முத்துக்குமார சுவாமிகள், சிவசங்கர சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், சிதம்பர சண்முக சுவாமிகள் ஆவார். தற்காலத்துப் பட்டம் வகிப்பவர் திரு. சிதம்பர சண்முக சுவாமிகள் ஆகும். அவர்களது நன்முயற்சியால் பல சிறப்புக்கள் இவ்வாலயத்தில் நடைபெற்று வருவதுஉலகம் அறிந்ததாகும்.

---

## திருப்பணிகள்

1. ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள்
   - (1) கந்தப்பெருமாள் கருப்பக்கிரகம், அந்தராளம், மஹா மண்டபம், மூர்த்திகள்.
   - (2) யந்திர ஸ்தாபனம்.

(3) கண்ணுவப்பேட்டையில் சரஸ்வதிகூடம் ஒடுக்கவறை, சுரங்கம்.
(4) வேலாயுத தீர்த்தம்.
(5) சுந்தரவிநாயகர், வேலாயுதர் பிரதிட்டை.

2. சிவசங்கரதேவர்

(1) தெய்வயானையம்மையார் சந்நிதியும் அதன் முன் மண்டபமும் ஒரு நவாப்பின்மூலம் நடந்தன.
(2) உட்பிரகார மண்டபம்.

3. முத்துக்குமார சுவாமிகள்

(1) உற்சவமூர்த்திகள் மூலவறைகள் மூன்று.
(2) வள்ளியம்மையார் சந்நிதி.
(3) சர்வவாத்திய மண்டபப்பணி ஆரம்பம்.
(4) இருபத்துநாற்கால் மண்டபம்.
(5) திருக்கோபுரத்துக்கு அடிப்படை.

4. சிவசங்கர சுவாமிகள்

(1) சர்வவாத்திய மண்டபப் பணி நிகழ்த்துதல், முக்குதிரைக் கால் இரண்டு, ஒற்றைக்குதிரைக் கால் இரண்டு, சாதாரண கால் நான்கு நிறுத்துதல்.
(2) இரதம்.
(3) பொன்வேய்ந்த மயில்வாகனம்.
(4) பதினாறுகால் மண்டபம் - சான்றார்கள் மூலமாக.
(5) ஒரு மண்டபம் - அக்கினி மூலையிலுள்ளது - வணிகர்கள் மூலமாக.

5. ஸ்ரீமத் முத்துக்குமார சுவாமிகள்

(1) வாகனமண்டபம் - வைசிய குலோத்துங்க நமச்சிவாய செட்டியார் மூலம்.
(2) வேம்படிவிநாயகர்கோயில் அபிவிருத்தி மதில்சுவருடன் - காமு செட்டியார் மூலம்.

6. ஸ்ரீமத் சிதம்பரத் தம்பிரான்

பஞ்சகாலத்தால் திருப்பணி இயலாததாயிற்று.

7. ஸ்ரீமத் சிவசங்கரத் தம்பிரான்

(1) சர்வவாத்திய மண்டபப் பணி முயற்சி.

8. ஸ்ரீமத் முருகேசத் தம்பிரான்

(1) ஆலயத்திருமதில்.

(2) மதிற்குட்பிரகார வாயு மூலைவரை தளவரிசை.

(3) திருமடைப்பள்ளித்தளம்.

(4) உக்கிராணம்.

9. ஸ்ரீமத் முத்துக்குமார சுவாமிகள்

(1) திருக்குளத்தில் நீராழிமண்டபம்.

(2) நாயகர் சந்நிதி வள்ளிநாச்சியார் சந்நிதி ஸ்தூபி ஜீர்ணோத்தாரணம்.

(3) சர்வவாத்திய மண்டபத் தளவரிசை.

(4) பிரணவசைலத்தில், கருப்பக்கிரகம், ஸ்தூபி, அந்தராளம், மஹாமண்டபம், பாலாம்பிகை சந்நிதி.

(5) வேலாயுதத் தீர்த்தக்கரையில் சுந்தரவிநாயகர் சந்நிதி கருங்கற் றிருப்பணி.

(6) கும்பாபிஷேகம், மண்டலாபிஷேகம்.

(7) துவஜஸ்தம்பம் சுற்றி வட்டப்பந்தல் - தொட்டிக்கலை சபாபதி முதலியார் அவர்கள் மூலம்.

10. ஸ்ரீமத் சிவசங்கர சுவாமிகள்—1903

(1) சர்வ வாத்திய மண்டபம் பூர்த்தி.

(2) துவஜஸ்தம்பத்துக்குச் செப்புத்தகடு வேய்ந்தது.

(3) மடாலயத்தில் சிதம்பர சுவாமிகள் திருவுருவம் அமைத்தது.

(4) சிதம்பர சுவாமிகளுக்குப் பத்துநாள் திருவிழா.

11. ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமிகள்—1903–1927

(1) சிதம்பரசுவாமிகள் சமாதியின்மீது சிவலிங்கப் பிரதிட்டை. வழக்கு மிகுதியால் திருப்பணிகள் இயலாதாயிற்று.

12. ஸ்ரீமத் சிதம்பர சண்முக சுவாமிகள்—1927

(1) வாசக்கால்மண்டபம்
(2) நாற்கால் மண்டபம்
} பாலூர் திரு. கன்னியப்ப கிராமணியார் அவர்கள் மூலம்

1934

| | |
|---|---|
| (3) துவஜஸ்தம்பம் வட்டதளம்<br>(4) திருக்குளம் வடகரைவாயிற் படி மண்டபம்<br>(5) பெரிய மடம் விநாயகர் | திரு. V. S. கங்ராராம் நாயுடு அவர்கள் மூலம் |

1934

| | |
|---|---|
| (6) திருக்குளம் வடகரை வாயிற் படிக்கு வடக்கு இடும்பன் இடும்பி சந்நிதிவரை | திரு. P. நடேச முதலியார் அவர்கள் மூலம், P.W.D.கண்டிராக்டர். |
| (7) யாகசாலை மண்டபம் | திரு. ஏகாம்பரம் செட்டியார் அவர்கள் மூலம் |
| (8) மயில் மண்டபம் | திரு. C. கல்யாணம் கம்பெனி அவர்கள் மூலம் பெரியமெட்டு. |
| (9) நாயகர் சந்நதிமேடை இரும்பு அடைப்பு | திரு. அமராவதி யம்மையார் பண்டு. |
| (10) சர்வ வாத்திய மண்டபம் தரைக்கல் சில பகுதி | |
| (11) வேம்படி விநாயகர் கோயில் இருமண்டபம் | திரு. சிந்தாதிரிப்பேட்டை |

(12) சிதம்பர சுவாமிகள் சமாதி சந்நிதி தெற்கு முகமாயிருந்ததைக் கிழக்கு முகமாகத் திருப்பி மண்டபம் அமைத்தது. திருமடம் பழுது பார்த்தல். (சுமார் 7000 ரூபாய்).

(13) மேற்படி சந்நிதியில் கிணறு

| | |
|---|---|
| (14) சின்ன மடம் பழுதுபார்த்தது கிணறு எடுத்தது | மரத்தொட்டி திரு. வி. இராமசாமி முதலியார். |
| (15) வேலாயுதத் தீர்த்தம் திருக்குளத் திருப்பணி | பலோர் உதவியால் நடைபெற்று வருகின்றது. |

(16) கண்ணாடிமண்டபம் - கண்ணாடியுடன்—திரு. எ. மு. முத்துக்குமார செட்டியார் மூலம் பொதுஜன வசூல்.

## அருணகிரிநாதர் திருப்புகழ்

தனத்தா தானன தானு தானன
தனத்தா தானன தானு தானன
தனத்தா தானன தானு தானன—தனதான

அனுத்தே னேர்மொழி யாலே மாமய
லுடைத்தார் போலவு மோர்நா ளானதி
லடுத்தே தூதுகள் நூறு முனதும் விடுவார்கள்
அழைத்தே வீடினி லேதா னேகுவர்
நகைத்தே மோடிக ளாவார் காதலோ
டடுத்தே மாமுலை மீதே மார்புற அணைவார்பின்
குனித்தே பாகிலை யீவார் பாதியில்
கடிப்பார் வாயிதழ் வாய்நீ ரானது
குடிப்பார் தேனென நானு லீலைகள் புரிவார்கள்
குறித்தே மாமய லாலே நீள்பொருள்
பறிப்பா ராசுகள் சூழ்மா பாதக
குணத்தார் மாதர்கள் மேலா சாவிட அருள்வாயே
வனத்தே வேடுவர் மாதா மோர்மினை
யெடுத்தே தான்வர வேதான் யாவரும்
வளைத்தே சூழவு மோர்வா ளால்வெலும் விறல்வீரா
மலர்த்தே னேடையி லோர்மா வானதை
பிடித்தே நீள்கர வாதா டாழியை
மனத்தா லேவிய மாமா லானவர் மருகோனே
சினத்தே சூரர்கள் போராய் மாளவு
மெடுத்தோர் வேல்விடு தீரா தாரணி
திருத்தோ ளாஇரு பாதா தாமரை முருகோனே
திருத்தேர் சூழ்மதி ளோரார் தூபிக
ளடுக்கார் மாளிகை யேநீ ளேருள
திருப்போ நநறை தேவா தேவர்கள் பெருமாளே. (க)

தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த—தனதான

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்க
உகப்பார் வாலசந்த்ர னுதனூலாம்

உருச்சேர் நீண்மருங்குல்
பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பா மேல்விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
வரைக்கே யோடியின்ப
வலைக்கே பூணுநெஞ்ச னதிபாவி
யசட்டால் மூடுகின்ற
மசக்கால் மாயுமிந்த
வவத்தா லீனமின்றி அருள்வாயே
எருக்கார் தாளிதும்பை
மருச்சேர் போதுகங்கை
யினைச்சூ டாதிநம்பர் புதல்வோனே
யிருக்கா லேநினைந்து
துதிப்பார் நாவிநெஞ்சி
விருப்பா யானைதங்கு மணிமார்பா
செருக்கா லேமிகுந்த
கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேல்கைகொண்ட முருகோனே
தினைக்கோர் காவல்கொண்ட
குறத்தேன் மாதுபங்க
திருப்போ நூரமர்ந்த பெருமாளே. (உ)

தான தானன தானன
தான தானன தானன
தான தானன தானன—தனதான

சீரு லாவிய வோதிம
மான மாநடை மாமயில்
சேய சாயல்க லாமதி முகமானர்
தேனு லாவிய மாமொழி
மேரு நேரிள மாமுலை
சேலு லாவிய கூர்விழி குமிழ்நாசி
தாரு லாவிய நீள்குழல்
வேய ளாவிய தோளியர்
சார்பி லேதிரி வேனைநின் னருளாலே

சாம வேதியர் வானவ
ரோதி நாண்மலர் தூவிய
தாளில் வீழவி ஞமிக அருள்வாயே
காரு லாவிய நீள்புன
வேடர் மால்வரை மீதுறை
காவல் மாதினொ டாவல்செய் தணைவோனே
காண வாகம வேதபு
ராண நூல்பல வோதிய
கார ணகரு ணகர முருகோனே
போரு லாவிய சூரனை
வாரி சேறெழ வேல்விடு
பூப சேவக மாமயின் மிசையோனே
போதன் மாதவன் மாதுமை
பாதி யாதியு மேதொழு
போரி மாநகர் மேவிய பெருமாளே. (ரு)

தனன தானன தானன தனன தானன தானன
தனன தானன தானன—தனதான

திமிர மாமன மாமட மடமை யேனிட ராணவ
திமிர மேயரி சூரிய திரிலோக
தினக ராசிவ காரண பனக பூஷண ஆரண
சிவசு தாவரி நாரணன் மருகோனே
குமரி சாமளை மாதுமை அமலி யாமளை பூரணி
குணக லாநிதி நாரணி தருகோவே
குருகு காகும ரேசுர சரவ ணசக ளேசுர
குறவர் மாமக ளாசைகொள் மணியேசம்
பமர பாரப்ர பாருண படல தாரக மாசுக
பசுர பாடன பாளித பகளேச
பசித பாரண வாரண துவச வேடக மாமயில்
பரவு பாணித பாவல பரயோக
சமப ராமத சாதல சமய மாறிரு தேவத
சமய நாயக மாமயில் முதுவீர
சகல லோகமு மாசறு சகல வேதமு மேதொழு
சமர மாபுரி மேவிய பெருமாளே. (சா)

# திருப்போரூர்ச் சந்நிதிமுறை

சோமகிரணப் பெருங்கருணை சுரந்தமுகங்க ளோராறுஞ்
சுருதிவழுத் தும் பன்னிரண்டு தோளுநீபத் தொடைமார்பும்
காமர்நிறச்செம் பட்டாடைக் காட்சிமருங்குஞ் சிறுசதங்கை
கலித்தவுபயத் திருத்தாளுங் கடையேன்றுதிக்கப் பணிப்பாயே
சேமநிதியே சுரர்பதியே தெய்வத்தருவே மலர்மருவே
செறிபூரணமே யாரணமே சிறியேனுயிருக் கோருயிரே
பூமனறியாப் பிரணவத்தின் பொருளைப்பகரும் பூங்கிளியே
போற்றுமடியார்க் கோரருளே போரூர்முருகப் பெருமாளே. ௧

மறையாகமத்தி னெறிப்படியே வணங்குமவரி னொருவனல்லேன்
மனுபேரன்பு தழைத்துநினை வந்திப்பாரி னொருவனல்லே
னிறைவாநினது புரணசுக நேசித்தவரி னொருவனல்லே
னீசனேனின் றிருப்பாத நிழற்குமுரித்தே னாவேனோ
சிறையார்தோகை மிசைத்தோன்றுந் தேவேயமரர் பணிகோவே
சிவனார்புயத்தி லணைத்தேந்துந் தெய்வக்குதலை மொழிக்குருந்தே
பொறையாலுயர்ந்த பெரியோர்கள் புந்திச்சுவையாஞ் செந்தேனே
புனிதநிறைந்த செவ்வேளே போரூர்முருகப் பெருமாளே. ௨

எண்ணிலாத நெடுங்கால மெண்ணிலாத பலபிறவி
யெடுத்தேயிளைத் திங்கவைநீங்கி யிம்மானிடத்தில் வந்துதித்து
மண்ணின்வாழ்க்கை மெய்யாக மயங்கியுழன்றா லடியேனுன்
மாறாப்பெருமை தரும்பாத வனசத்துணையென் றடைவேனோ
கண்ணின்மணியே யுயிர்க்களியே கருணைப்புயலே சுகக்கடலே
கச்சித்தாயுச் சியைமோந்து கண்ணோடணைக்குந் திருத்தாளா
புண்ணியோரெண்ணிய கரும்பே பொழிமும்மத வாரணமுகத்தோன்
பொற்பார் துணையே யற்புதனே போரூர்முருகப் பெருமாளே. ௩

கள்ளஞ்செறிந்த வஞ்சநெஞ்சக் கயவனேனைப் புலயனேனைக்
கருதாசார வீனமுடைக் கசடனேனை மயல்செறிந்த
வுள்ளமுடைப் பொய்யவனேனை யுன்பேரருளா லுறநோக்கி
உயர்பேரின்பத் திடையிருத்தா தறினாயடியே னுய்வேனோ
வெள்ளஞ்செறிந்த சடாமகுட விமலன்புதல்வா அரிமருகா
வேடர்குலமாமகள் கணவா விறன்மாமுனிவர் தொழுந்தலைவா
புள்ளுஞிமிறுங் கலந்தார்க்கும் புனிதநீபத் தொடைமார்பா
புரைதீர்தகரப் பரியேறும் போரூர் முருகப்பெருமாளே. ௪

சீலமிகுந்த பத்திநெறி தினமுமாறு நடையினராய்ச்
செலுத்தாநெறியிற்பொறிவழியிற்செல்லாதிருந்தவுளத்தினராய்க்
கோலஞ்சிறந்த படியேநற் குணமுஞ்சிறந்தோ ராகியுனைக்
கூடுமடியார் போலெனையுங் குறித்தாட்கொண் டாய்நீயன்றோ
நாலுவேதந் தொழுதேத்து நாதமுடியிற் பேரொளியே
நம்புமடியார்க் கின்பமெல்லா நல்குந்தேவே கயவர்தமைப்
போலுந்திரிந்தே னுளம்புகுந்த போதானந்தப் பெருங்கடலே
புவியீடேற மயிலேறும் போரூர்முருகப் பெருமானே. ரு

தனுவோடிலகு கரணமுடன் சாரும்போக புவனமிவை [கின்றே
தமையானென தென்றுணர்ந்துமய றழைத்துத் தருக்கோடுழல்
னுனதாமவை கண்மாயையிடை யுதிக்கச்செய்தாய் நீயதனு
லுள்ளவாறிம் முறைமைதனை யுணராச்சிறியே னுய்வேனோ
பனகாபரணர்க் குபதேசம் பாலித்தருளும் பரகுரவா
பைந்தார்க்கூந்தற் றெய்வானை பரிந்துமகிழ வருகணவா
புனைபாமாலை தரித்தேத்தும் பொருவி லருணகிரிநாதன்
புகழ்வீட்டின்பம் பெறவுதவும் போரூர்முருகப் பெருமானே. சு

மன்னராவா ருறுசுகமும் வானோர்மகிழ்ந்து பெறுசுகமும்
மணிப்பைந்நாகத் தவர்சுகமு மற்றையோர்க ளடைசுகமும்
பன்னுமிடத்திற் சிவத்தெழுந்த பரமானந்த லேசமெனப் [ன்
பகர்ந்தாய் குருவாயெழுந்தருளிப் படிறேன்மறந்திங் குழல்கின்றே
கன்னலெழுந்த தெளிசாறே கட்டுமாவின் றீங்கனியே
கதலிக்கனியே நற்பலவின் கனகச்சுளையே கதிமுளையே
பொன்னம்பொருப்பே யென்விருப்பே போதச்சுகமே கிஞ்சுகமே
புரணவெளியே யுள்ளொளியே போரூர் முருகப்பெருமானே. எ

ஓகைபுரிந்து நன்னூலா லுணரத்தகுவெலா முணர்த்தி
யுறுபேரருளா ரியனாகி யுபதேசங்கள் பலமொழிந்தீண்
டாகமருவு முயிர்க்குயிரா யறியாதனயா வையுமுணர்த்தி [தோ
யடியேன்றனையிங் காண்டுகொண்ட அருளுக்கோர் கைம்மாறுள
வாகைபுனைவே விறையோனே வழுத்துநாலு மறையோனே
வானோர்க்குறு சேனாபதியே மலயமுனிவன் குருபதியே
பூகமலிந்த செங்குலைக்காய்ப் புடையிற்சிகரக் கயல்பாயும்
பொருவின்மருதச் சூழல்செறி போரூர்முருகப் பெருமானே. அ

வேதமுடியி னுறுபொருளை விரிபூமிசைச் சேவடிபொருந்த
விகிர்தகுருவா யெழுந்தருளி விளம்புமவித்தை யிருளிரிய
வோதுமணியே யடியேனுன் னுபயசரண மறந்தாலு
முறுபேரருளான் மனந்திருத்தி யுயரச்சரணத் திருத்தாயே
நாதமளிக்குங் குரற்புலியி னங்கம்போற்றுண்டச் செஞ்சூட்டு [னே
நலத்தபொறிச் செஞ்சிறைச்சேவ னளினக்கரத்திற் பிடித்தோ
பூதகணங்கள் கொண்டாடப் பொருசூர்குலவேர் களைந்தவைவேல்
புனிதப்புயத்தின் மிசையேந்தும் போரூர் முருகப்பெருமாளே. கூ

அலையிலாத சாகரம்போ லனிலஞ்சேரா விளக்கதுபோ
லருங்கவிரும்பொன் சமமாகி யானதராசி னுனியதுபோ
னிலையொன்றிய நற்சமாதியுற்று நின்றுட்கமலத் தெழும்பிரச
நிறைவாரிதியிற் புகுந்ததனி னேசித்தடியே னிருப்பேனோ
விலையின்மகுடத் திருமுடியாய் மிளிர்குண்டலங்கள் செறிகாதா
வியன்கேயூரத் திருத்தோளா விஞ்சுஞ் சதங்கைசூழ்தாளா
புலையுங்கொலையுங் களவுமில்லாப் புனிதத்தவத்தோர் தொழுதேத்தும்
புராரிகுமரா வுமைசிறுவா போரூர் முருகப்பெருமாளே. கo

---

அஷ்டாவதானம் புரசை - சபாபதி முதலியார் அவர்கள்

இயற்றிய

## திருப்போரூர் வெண்பா

மாமணிசூழ் கோபுரஞ்சீர் வாய்ந்த விராட்புருடன்
பூமணிசூழ் மோலியெனும் போரூரே - தாமப்
பணிகை வரையார் பரிந்தளித்த வேலர்
தணிகை வரையார் தலம். சு

செந்திருவும் வெண்பதுமஞ் சேர்திருவும் அன்புசெய்வோர்
புந்தி களிக்கவரும் போரூரே - அந்தி
நிறத்தார்க்கு மெய்யர் நெடுங்கலைஞா னந்தேர்
அறத்தார்க்கு மெய்ய ரகம். எ

சித்திரமின் கோயில்வலஞ் செய்யவிர தம்போற்றப்
புத்திரசம் பத்திவரும் போரூரே - சித்தசனூர்
கூரம்ப ருக்கினியார் கோமளவா மத்தர்தரு
மேரம்ப ருக்கினியா ரின்பு. கOO